# 108 உபநிஷத்துக்களின் சுருக்கம்

(தொகுதி 5)

அ.வெ. சுகவனேச்வரன்



அருணகம்
19, கண்ணதாசன் சாலை,
தியாகராய நகர்,
சென்னை - 600 017.

-ருட்டு.

**108 UPANISHATHKALIN SURUKKAM PART - V**
❑ by A.V. SUGAVANESWARAN ❑ First Edition : 2005
❑ Published by ANURAGAM 19, Kannadhasan Salai, T.Nagar Chennai - 600 017. ❑ Typeset by : Sri Sathya Sai Graphics, Chennai - 600 017 ❑ Printed at : Sakthi Printers, Chennai - 600 021.

விலை ரூ12.00



34. மந்த்ரிகோபநிஷத், 35. ஸர்வ ஸாரோபநிஷத், 36. நிராலம்போபநிஷத், 37. சுக ரஹஸ்யோபநிஷத், 38. வஜ்ரஸூசிகோபநிஷத், 39. தேஜோ பிந்து உபநிஷத், 40. நாத பிந்து உபநிஷத், 41. த்யான பிந்து உபநிஷத், 42. ப்ரஹ்ம வித்யோபநிஷத், 43. யோக தத்வோபநிஷத், 44. ஆத்மப்ரபோத உபநிஷத் ஆகிய உபநிஷத்களின் சுருக்கம் இந்த நூல்.

- அநுராகம்

# 108 உபநிஷத்களின் சுருக்கம்

## தொகுதி 5

### 34. மந்த்ரிகோபநிஷத்

இது சுக்ல யஜுர் வேதத்தைச் சேர்ந்தது. 'நானே அவன்' (ஹம்ஸம்) என்ற சொல்லால் குறிக்கப்படுவதாயும், ஒளி வடிவாயும், அனைத்தினும் உறைவதாயும் உள்ள தத்துவத்தை மனிதன் எப்பொழுதும் கண்டு கொண்டே இருக்கிறான். ஆனால் மாயை அதை மறைக்கிறது. அந்த மதி மயக்கத்தால் அவன் அதைத் தெரிந்து கொள்வதில்லை. அக்ஞான இருள் நீங்கி, ஞானோதயம் ஏற்படுகையில், ஸத்துவ குணத்தில் நிலை பெற்றவர்கள், குணமாகிற குகையில் மறைந்திருக்கும் நிர்க்குணப் பொருளைத் தமக்குள்ளேயே காண்கிறார்கள்.

தோன்றியவை எல்லாம் எதில் மறைந்து காணாமல் போய், அதிலிருந்தே மீண்டும் குமிழிகளைப் போல வெளிக் கிளம்புகின்றனவோ, அதை ஞானிகள் காண்கிறார்கள்.

புலன்களால் அறிய முடியாத பிரம்மத்தை நாடி, அதிலேயே லயித்தவர்கள், வேறு உலகங்களுக்குச் செல்லாமல், இங்கேயே அதிலேயே லயமடைகிறார்கள்.

மாணிக்கவாசகர் பாடுகிறார்.

**ஒன்றினொடு ஒன்றும் ஓர் ஐந்தினொடு ஐந்தும்**
**உயிர்ப்பதும் ஆகாதே.**

*- திருவாசகம் / திருப்படை ஆட்சி 49/2*

பொருள்: உடலும் உயிரும் என்ற கோட்பாடும், ஐம்பொறிகள் ஐம்புலன்கள் என்ற கோட்பாடும் வாழ்ந் திருத்தல் என்ற கோட்பாடும் அகண்ட சச்சிதானந்தத்தில் ஒன்றுபடும் பொழுது மாயமாய் மறைந்து போகின்றன.

## 35. ஸர்வ ஸாரோபநிஷத்

இது கிருஷ்ணயஜுர் வேதத்தைச் சேர்ந்தது. வேதாந்தத்தில் பல தனிப்பட்ட சொற்களை உபயோகிக் கிறோம். பந்தம், மோக்ஷம், அவித்தை, ஞானம், ஜீவன், அந்தர்யாமி, பரமாத்மா இன்னும் இம்மாதிரியான பல சொற்களைக் கொண்டு வேதாந்த தத்துவங்களை விளக்கு கிறோம். இந்த உபநிஷத் அச்சொற்களின் பொருளை ஆராய்கிறது.

உடல் முதலிய பொருள்களை ஆள்வது ஆத்மா. உடல் முதலியவற்றைத் தான் எனக் கருதும் பற்று ஆத்மாவிற்குப் பந்தம்; அதனின்று விடுதலையே மோக்ஷம். அப்பற்றை உண்டாக்குவது அவித்தை. எதனால் பற்று விலகுகிறதோ அது ஞானம்.

ஐந்து காமேந்திரியங்கள், ஐந்து ஞானேந்திரியங்கள், மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் முதலிய பதிநான்கு கரணங்களும், ஆதித்தியன் முதலிய தேவதைகளால் அனுக்கிரஹிக்கப்பட்டு, சப்தம் முதலிய விஷயங்களை எப்பொழுது அறிகின்றனவோ, அப்பொழுது தோன்றுவதே ஆத்மாவின் விழிப்பு நிலை. அந்த நினைவுகளுடன்

கூடிய மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் எனும் நான்கு அந்தக் கரணங்கள் மூலமாக மட்டும், சப்தம் முதலியவை இல்லாத பொழுதும், நினைவு வடிவான சப்தம் முதலியவற்றை எப்பொழுதும் ஆத்மா அனுபவிக்கிறதோ, அது கனவு நிலை. பதிநான்கு கரணங்களும் ஒய்ந்து, விசேஷமான உணர்வு ஏதுமில்லாத நிலை ஆத்மாவிற்கு உறக்கம். இந்த மூன்று நிலைகளின் இருப்புக்கும் இல்லாமைக்கும் சாட்சியாகவும், அப்படிப்பட்ட இருப்பும் இல்லாமையும் அற்றதாயும், எல்லையற்றதாயும், ஒரே வடிவாயும் உள்ள நிலை துரீயம் எனப்படும்.

உணவால் உண்டாக்கப்பட்ட உறுப்புகளின் தொகுதி அன்ன மயகோசம் பிராணன் முதலிய பதினான்கு வாயு வகைகள் அன்ன மயகோசத்தில் எப்பொழுது புகுந்து உறைகின்றனவோ, அப்பொழுது அது பிராணமயகோசம் எனப்படுகிறது. இவ்விரண்டு கோசங்களையும் பற்றிக் கொண்ட ஜீவாத்மா, மனம் முதலிய பதினான்கு கரணங்களால், சப்தம் முதலிய விஷயங்களைப் பற்றிய விருப்பங்களை எப்பொழுது ஏற்கின்றதோ, அப்பொழுது அது மனோமய கோசம் எனப்படுகிறது. இம்மூன்று கோசங்களுடன், அவைகளின் விசேஷங்களை உணர்ந்து, ஜீவன் எப்பொழுது பிரகாசிக்கிறதோ, அப்பொழுது அது விக்ஞானமய கோசம். இந்த நான்கு கோசங்களுடன் கூடித் தனக்குக் காரணமான வஸ்துவில், அதை அறியாமல், ஆல விதையில் மரம் (நுட்பமாக) இருப்பது போல, ஜீவாத்மா எப்பொழுது இருக்கிறதோ, அப்பொழுது அது ஆனந்தமய கோசம் எனப்படுகிறது.

இன்பமும் துன்பமும் உண்டாகும் புத்தியில் உறைபவன் கர்த்தா. விரும்பிய விஷயத்தில் அவன் புத்தியைச் செலுத்தும் பொழுது இன்பம் விளைகிறது. விருப்பமில்லாத விஷயத்தில் அவன் புத்தியைச் செலுத்தும் பொழுது, துன்பம் உண்டாகிறது.

ஒலி, தொடுதல், வடிவம், சுவை, மணம் என்பவை இன்பத்திற்கும் துன்பத்திற்கும் காரணங்கள் புண்ணிய பாவங்களை அனுசரித்து, உடலை அடைந்து, ஆனால் உடலுடன் ஒட்டாது, அவைகளை வரம்புகளாகக் கருது பவன் ஜீவன் எனப்படுகிறான்.

மனம், பிராணன், ஸத்வம், இச்சை, புண்ணியம் முதலிய ஐந்து தொகுதிகளின் செயல்களைச் செய்பவ னாகத் தன்னைக் கருதுபவன், அக்ஞானம் அழியாமல், ஆத்ம ஞானமில்லாமல், அதிலிருந்து விடுபடுவதில்லை. ஆத்மாவின் முன்னிலையில், நித்தியமான ஆத்மாவிற்கு வரம்புகளாக உள்ள மேற்கூறிய ஐந்து தொகுதிகளும் லிங்கசரீரம் எனப்படும். அவைகளிலுள்ள பற்று ஹிருதயக்ரந்தி எனப்படும். அந்த லிங்கசரீரத்தில் பிரகா சிக்கும் சைதன்யம் (பரம்பொருளின் ஒளி) க்ஷேத்ரக்ஞன் எனப்படுகிறது.

அறிபவன், அறிவது, அறியப்படுவது ஆகியவற்றின் தோற்றத்தையும், மறைவையும், உணர்பவனாயும், தான் தோற்றமும் மறைவும் இல்லாதவனாயும், சுயம் பிரகாச மாகவும் உள்ளவன் சாட்சி எனப்படுகிறான். பிரம்மா முதல் எறும்பு வரை உண்டாக்கப்பட்ட எல்லாப் பிராணி

களிலும், ஏற்றத்தாழ்வு இல்லாமல், காணக்கூடியவனாய், எல்லாப் பிராணிகளின் புத்திகளில் உறைபவன் கூடஸ்தன் எனப்படுகிறான்.

வரம்புகளுடன் கூடியதால் வேறுபாடுகள் உள்ள கூடஸ்தன், பல வடிவங்களுக்குக் காரணமாகி, ரத்தினங் களைக் கோத்து மாலையாக்கும் சரடு போல, எல்லா உடல்களிலும் ஊடுருவித் தொடர்ந்து பிரகாசிக்கும் ஆத்மாவாக விளங்குவது அந்தர்யாமி எனப்படும். இதுவே, சாந்தோக்கிய உபநிஷத்தில் வரும் தத்துவம் அஸி எனும் ஸாமவேத மஹாவாக்கியத்தில் துவம் என்ற சொல்லின் பொருளாக விளங்கும் பிரத்யகாத்மா.

ஸத்தியம், ஞானம், அனந்தம், ஆனந்தம், பிரம்மம் எனப்படுகிறது அது என்றும் அழியாதது. பெயர், இடம், காலம், பொருள், நிமித்தம் ஆகியவை அழியும் பொழுது எது அழியாமல் எஞ்சுகிறதோ, அது ஸத்தியம் எனப்படும். படைப்பும் அழிவும் இல்லாத அறிவு ஞானம் என்று கூறப்படுகிறது.

மண்ணாலான உருவங்களில் மண்ணைப் போலவும், பொன்னாலான உருவங்களில் பொன்னைப் போலவும், நூலாலான சேலைகளில் நூலைப் போலவும், உண்டாக்கப் பட்ட உலகில் ஏற்கனவே ஊடுருவியிருந்த சைதன்யம் (பரம்பொருளின் ஒளி) அனந்தம் எனப்படும் இன்ப வடிவ சைதன்யஸ்வரூபம், அளவு கடந்த கடல் போன்று எங்கும் பரந்ததாய் உள்ளது ஆனந்தம் எனப்படுகிறது.

ஸத்தியம், ஞானம், அனந்தம், ஆனந்தம் என்ற இந்த நான்கும் எதனுடைய குறிகளோ தேசம், காலம், வஸ்து, நிமித்தம் ஆகியவைகளால் மாறுபடாததோ, அது 'தத்துவமஸி'யின் தத் என்ற சொல்லின் பொருள். அதைத் தான் பரமாத்மா என்றும் பரம்பொருள் என்றும் பரப் பிரம்மம் என்றும் கூறுவர்.

வரம்புகளுடன் கூடிய 'துவம்', 'தத்' ஆகிய இரு சொற்களும் அவைகளுடைய பொருள்களிலிருந்து பிரிந்து, ஆகாயத்தைப் போல் எங்கும் பரவி, ஸூக்ஷ்ம மாய், தனித்த ஸன்மாத்திரமாய் சுயம் ஜோதியாய் உள்ள பொருள் 'அஸி' எனப்படும் அதுதான் ஆத்மா எனப்படுவது.

ஆரம்பமில்லாததும், எல்லாவற்றினுள்ளும் உறை வதும், அத்தாட்சிக்கும் அத்தாட்சியின்மைக்கும் சமமாக வும், உளதென்னும் இலதென்னும் கூறமுடியாததாயும், தான் மாறுபடாமல் மாறுபாடுகளுக்குக் காரணமாய் இருப்பதும், ஆராய்ந்து நிரூபிக்க முயன்றால் இல்லாத தாயும், அப்படி நிரூபிக்க முயலா விட்டால் உளதாயும், அடையாளம் ஏதுமில்லாததும் உள்ளது எதுவோ அது மாயை எனப்படுகிறது.

இத்துடன் பின் வரிகளை ஒப்பிடலாம்.

i. **மண்ணில் மாயை மதித்து வகுத்த**
**மயக்கு அறும் ஆகாதே.**

*- மாணிக்கவாசகர்/திருவாசகம்/திருப்படை ஆட்சி 49/5*

பொருள்: மண்ணுலக வாழ்க்கையில் பெரும் பற்று வைக்கும்படி மாயாசக்தி அதற்கு மதிப்புக் கொடுக்கிறது. நிர்விகல்ப சமாதியில் அந்த மயக்கம் அறுபட்டுப் போகிறது.

ii. அங்கு இது நன்று இது நன்று எனும்
மாயை அடங்கிடும் ஆகாதே.

- மாணிக்கவாசகர்/திருவாசகம்/திருப்படை ஆட்சி 49/8

பொருள்: கர்மம் மாயையின் கூறு ஆகிறது. நல்ல கர்மத்தையே செய்தல் என்பது இவ்வுலகிற்குரியது. நல்ல கர்மத்தையும் கடந்து அதீதத்திற்குப் போகும் பொழுது, மாயையின் ஆதிக்கம் அடங்கி விடுகிறது.

## 36. நிராலம்போபநிஷத்

இது சுக்ல யஜுர் வேதத்தைச் சேர்ந்தது. ஸமஸ்கிருதத்தில் ஆலம்பம் என்றால் தாங்குதல், ஆதாரம் என்று பொருள். நிராலம்பம் என்றால் ஆதார மற்றது. சுயேச்சையானது என்று பொருள்படும். மற்ற ஆதாரங்கள் இல்லாமல், இந்த உபநிஷத் மோக்ஷத்திற்கு வழி காட்டுவதால் இதற்கு இப்பெயர் வந்தது. அல்லது சுயேச்சையான பிரம்மத்திற்கு வழிகாட்டுவதால் இந்த உபநிஷத் இப்பெயர் பெற்றது எனவும் கூறலாம்.

ஸச்சிதானந்த வடிவான சிவனுக்கு நமஸ்காரம். பற்றற்றதைப் பிடித்துக் கொண்டு பற்றுகளைக் களைபவன் ஸந்நியாஸி. இரண்டற்றதும், வரம்புகளற்றதும்,

எல்லா சக்திகளும் நிறைந்ததும், அடி முடியற்றதும், சிவம், சாந்தம், நிர்க்குணம் என்ற சொற்களால் சொல்லப் பட்டாலும், சொற்களால் சொல்ல முடியாததும், எந்தச் சைதன்யம் உளதோ அது பிரம்மம் எனப்படும்.

அந்தப் பிரம்மம் பிரகிருதி எனும் தன்னுடைய சக்தியைக் கொண்டு உலகைப் படைக்கிறது; அது அந்தர்யாமி வடிவில், பிரம்மா முதலியவற்றுள் புகுந்து, அவற்றினுடைய புத்தியையும், புலன்களையும் இயக்கு கையில் ஈசுவரன் எனப்படுகிறது.

பிரம்மா, விஷ்ணு, ஈசுவரன், இந்திரன் முதலிய பெயர்களையும் உருவங்களையும் கொண்டு, வரம்பு களை மேற்கொண்டு, 'நான்' என்று தோன்றும் பொழுது, அது ஜீவன் எனப்படும். அந்த 'நான்' ஒன்றேயாயினும், உடல்களின் வேறுபாட்டால் ஜீவர்கள் பலர் ஆகின்றனர். பிரம்மத்துடன் கூடி, இவ்வுலகைப் படைக்கும் பிரம்ம சக்தியே பிரகிருதி எனப்படும்.

தோலுக்கும், ரத்தத்திற்கும், மாம்ஸத்திற்கும், எலும்புக்கும் ஜாதி இல்லை. ஆத்மாவிற்கு ஜாதி வெறும் கற்பனையே, மெய்யல்ல.

ஆத்மாவிடம் புலன்களின் செயல்களைப் பொருத்து வது கர்மம் எனப்படும். பார்ப்பவனிடமும், பார்க்கப் படும் பொருளிலும் அனைத்துள்ளும் உறைவது ஞானம். இரண்டற்ற பிரம்மத்தில், வேறுபாட்டைக் காண்பது அக்ஞானம்.

ஸச்சிதானந்த வடிவான ஆத்மாவின் ஆனந்த ரூபத்தில் நிலைத்திருத்தல் சுகம். ஆத்மா அல்லாத விஷயங்களை நாடுதல் துக்கம். ஸாதுக்களுடன் உறவாடு தல் சுவர்க்கம். ஸம்ஸாரத்தில் ஆழ்ந்த மக்களுடன் கூடுவது நரகம். உறவினர், செல்வம் முதலியவை என்னுடையவை என்ற எண்ணம் பந்தம். நான் கர்த்தா என்ற அஹங்காரமும், ஆசைகளும், தேவ வழிபாடும், யோகமும் பந்தம். வர்ணாசிரம கர்மங்கள், யாகம், விரதம், தவம் தானம் எல்லாம் பந்தம். தான் ஒருவன் மோக்ஷமடைய வேண்டும் என்ற விருப்பமும் பந்தம் அழிவது எது, நித்தியமானது எது என்ற விவேகத்துடன், ஸம்ஸார சுகதுக்க விஷயங்களிலும், பார்க்கப்படும் பொருள்களிலும் என்னுடையது என்ற எண்ணம் முற்றிலும் அழிதல் மோக்ஷம் எனப்படும்.

அனைத்துள்ளும் அறிவு வடிவாய் விளங்கும் பரம் பொருளை அறிபவன் வித்துவான். தான் கர்த்தா என்று எண்ணுபவன் மூடன். எல்லாத் தர்மங்களையும் துறந்து, அஹங்கார மமகாரமில்லாமல், இஷ்டமான பிரம்மத்தை நாடிச் சரண் புகுந்து, 'ப்ரஹமைவாஹம் அஸ்மி' (நான் பிரம்மாகவே இருக்கிறேன்) என்று நிச்சயித்து, நிர்விகல்ப சமாதியில் சுதந்திரமாக உலவுவன் ஸந்நியாஸி, யோகி, பரமஹம்ஸன் என்பது முடிவு.

# 37. சுக ரஹஸ்யோபநிஷத்

இது கிருஷ்ண யஜுர் வேதத்தைச் சார்ந்தது. வஸிஷ்டரின் கொள்ளுப்பேரனும், சக்தியின் பேரனும், பராசரரின் மகனுமான கிருஷ்ணத்வைபாயனர், பிற்காலத்தில் வேதங்களைப் பிரித்துச் சீர்படுத்தியதால், வேத வியாஸர் என்ற பெயரைப் பெற்றார். வியாஸருக்கு சுகன் என்ற மகன் பிறந்தான். குழந்தைப் பருவத்திலேயே அவன் மிகுந்த தேஜஸ்வியாக விளங்கினான். அவனுக்கு உபநயனம் செய்வதற்குரிய வயது வந்ததும், வியாஸர், அவனுக்குப் பரமசிவனே நேரில் வந்துப் பிரம்மோபதேசம் செய்து வைக்க வேண்டும் என விரும்பி அவரைக் குறித்துத் தவம் புரிந்தார். பரமசிவனும் நேரில் வந்து அவர் வேண்டுகோளுக் கிணங்கினார். அதன் படி, பரமசிவன் சுகருக்குச் செய்த பிரம்மோபதேசமே இந்த உபநிஷத்.

எதனால் ஒருவன் பார்க்கிறானோ, கேட்கிறானோ, முகர்கிறானோ, பேசுகிறானோ, சுவையையும், சுவையற்றதையும் உணர்கிறானோ, அந்த அறிவு பிரக்ஞானம் எனப்படும். பிரம்மா, இந்திரன் முதலிய தேவதைகள், மனிதன், குதிரை, பசு முதலிய எல்லா இடங்களிலும் உள்ள சைதன்யம் அல்லது அறிவு பிரம்மம் எனப்படும்.

பெயர் வடிவமில்லாமல், இரண்டற்ற ஒன்றாகப் படைப்புக்கு முன் இருந்த அது இப்பொழுதும் அப்படியே இருக்கிறது. அதுதான் 'தத்துவம் அஸி' (நீ அதுவாக

உள்ளாய்) என்ற மஹா வாக்கியத்தில் தத் என்ற சொல்லால் குறிக்கப்படுகிறது. கேட்பவனின் உடலுக்கும் புலன் களுக்கும் அப்பாற்பட்டதாய் உள்ளே விளங்கும் உண்மைப் பொருள் துவம் என்ற சொல்லால் குறிக்கப்படுகிறது. அஸி என்ற சொல் இரண்டும் ஒன்றே என்பதைக் குறிக்கிறது. இந்த ஐக்கியத்தைக் கண்டு அனுபவிக்க வேண்டும்.

பார்க்கப்படும் உலகனைத்தும் ஊடுருவியிருக்கும் தத்துவம் பிரம்மம். அது சுயம்பிரகாச ஆத்மரூபம்.

இந்த ஜீவன் காரிய வரம்புடன் கூடியவன். ஈசுவரன் காரண வரம்புடன் கூடியவன். காரியம் காரணம் இரண்டையும் நீக்கினால், பூரண ஞானம் தான் எஞ்சி நிற்கும்.

முதலில் குருவிடமிருந்து மஹா வாக்கிய உபதேச மான சிரவணம். பிறகு தனக்குத் தானே ஆராய்ச்சியான மனனம். அதன் மேல் நிச்சய புத்தியான நிதித்தியாஸனம். இவை பூர்ண ஞானோதயத்திற்குக் காரணங்கள்.

முனிச்சிரேஷ்டராகிய சுகரே! பிரம்மோபதேசம் செய்யப் பெற்றநீர் இனி எக்காலத்தும், ஜீவன் முக்தராகத் தியானத்தில் நிலை பெற்று உலவுவீர். வேதத்தின் ஆதியில் விளங்கும் ஒலி, வேதாந்தத்தில் நிலை பெற்றுப் பிரகிருதி ஒடுங்குமிடம் மஹேச்வரன்.

பரமசிவனுடைய உபதேசத்தைப் பெற்ற சுகர், தன்னுடையது என்று ஏதுமில்லாமல் துறந்து, எழுந்து,

ஈசுவரனை வணங்கி, உலகுடன் இரண்டறக் கலந்து தன்மயமாகி விட்டார். துறவியாகச் செல்லும் அவரைப் பின்பற்றி வியாஸர் 'மகனே' எனக் கூவினார். அப்பொழுது மரம், செடி, கொடிகளும், பிராணிகளனைத்தும் 'ஏன் ஏன்' என்று எதிரொலி செய்தன. அனைத்தின் வடிவான அவ்வொலியைக் கேட்டு வியாஸர் முதலில் பிரமித்தார். பிறகு தன் மகன், உலகிலுள்ள எல்லாப் பொருள்களிலும் ஒருங்கிணைந்து, சுகப் பிரம்மமாகி விட்டதை உணர்ந்து, அவனுடன் கூடி, ஆனந்தத்தை அடைந்தார்.

## 38. வஜ்ரஸூசிகோபநிஷத்

இது ஸாம வேதத்தைச் சார்ந்தது. வடமொழியில் ஸூசிகா என்றால் ஊசி எனப் பொருள். ஆக, வஜ்ரஸூசிகா என்றால் வைர ஊசியாகும். எஃகு போன்ற கடினமான தாதுப் பொருள்களை ஊடுருவித் துளையிடும் சக்தி வாய்ந்தது வைர ஊசி. அறியாமையில் துளையிட்டு, அதிலிருந்து ஞானத்தை அடைய வழி கோலுவதால் இதற்கு இப்பெயர் வந்தது.

ஜாதிகளில் பிராம்மணன் உயர்ந்தவன் என்று வேதம் கருதுகிறது; ஸ்மிருதி நூல்களும் இதைப் பின்பற்றுகின்றன. யார் பிராம்மணன்? ஜீவனா, உடலா, ஜாதியா, ஞானமா, கர்மமா, தர்மமா?

ஜீவன் பிராம்மணன் என்பது ஒவ்வாது. சென்றதும், வரப்போவதுமான பல உடல்களில், ஜீவன் ஒரே வடிவமாயிருப்பதாலும் ஒருவனேயாயினும் கர்ம வசத்தால் பல உடல்கள் ஏற்படுவதாலும், எல்லா உடல்களிலும் ஜீவன் ஒரேமாதிரி இருப்பதாலும், ஜீவனைப் பிராம்மணன் எனக் கூற இயலாது.

உடல் பிராம்மணன் என்பதும் பொருந்தாது. ஐந்து இயற்கைச் சக்திகளாலான உடல், உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்ற பாகுபாடு இல்லாமல் ஒரே வடிவமாக இருக்கிறது; மூப்பு, மரணம் முதலியன சமமாகக் காணப்படுகின்றன; ஒவ்வொரு ஜாதிக்கும் ஒரு நிறம் என்ற நியதி ஏதுமில்லை; தந்தையாகிய பிராம்மணன் இறந்ததும், அவன் மகன் தந்தையின் உடலை எரிக்கிறான்; அப்பொழுது மகனுக்குப் பிரம்மஹத்தி தோஷம் ஏற்படுவதில்லை. இக்காரணங்களால் உடல் பிராம்மணனாக இருக்க முடியாது.

ஜாதியால் பிராம்மணனா என்றால் அதுவும் இல்லை. பிற ஜாதிகளிலும், மனிதரல்லாத மற்றப் பிராணிகளிலும் பொருள்களிலும் பிராம்மணர்கள் தோன்றியிருக்கிறார்கள். ரிஷ்யச்சிருங்கர் மானிடம் பிறந்தார்; கௌசிகர் தர்ப்பையில் தோன்றினார்; ஜாம்பூகர் நரியிடம் பிறந்தார்; வால்மீகி புற்றினின்று உதித்தவர்; வியாசர் செம்படவப் பெண்ணுக்குப் பிறந்தவர்; கௌதமர் முயலிடம் பிறந்தவர்; வசிஷ்டர் ஊர்வசியிடம் பிறந்தவர்; அகஸ்தியர் கும்பத்தில் தோன்றியவர். இம்மாதிரிப் பிறவியால்

இல்லாமலேயே, ஆதியில் ஞானப் பிரகாசம் அடைந்த ரிஷிகள் பலர் இருந்திருக்கின்றனர். ஆகையால் ஜாதியால் பிராம்மணன் என்பது பொருந்தாது.

அறிவால் பிராம்மணன் என்பதும் பொருந்தாது. ஜனகர், அஜாதசத்துரு முதலிய க்ஷத்திரியர்கள் மிகச் சிறந்த அறிவாளிகள். எனவே அறிவால் பிராம்மணன் என்பதும் சரியில்லை.

கர்மத்தால் பிராம்மணன் என்றால் அதுவும் இல்லை பிராரப்தம், ஸஞ்சிதம், ஆகாமி என்ற கர்மங்கள் எல்லோருக்கும் பொது; பூர்வகர்மத்தால் தூண்டப்பட்டு, மக்கள் பல செயல்களைப் புரிகிறார்கள். ஆகையால் கருமத்தால் பிராம்மணன் ஆவதும் இல்லை.

தர்மத்தால் ஒருவன் பிராம்மணன் ஆவது என்பதும் இல்லை. அரசர்கள் முதலிய க்ஷத்திரியர்கள் பலரும், மற்றும் சிலரும் பொன்னையும் பொருளையும் வாரி வழங்கியுள்ளார்கள். ஆகையால் தர்மத்தால் பிராம்மணன் ஆவது என்பதும் ஒவ்வாது.

பிறகு யார் தான் பிராம்மணன்? அவன் இரண்டற்ற ஆத்மாவை, உள்ளங்கை நெல்லிக் கனிபோல, ஜாதி, குணம், கிரியை அற்றதாகக் காண்கிறான்; அவன் பிறப்பு, இருப்பது, வளர்ச்சி, மாற்றம், மூப்பு, மரணம் ஆகிய ஆறு அலைகளற்றதாக ஆத்மாவைக் காண்கிறான்; அவன் ஆத்மாவை மூப்பு, மரணம், துயரம், மயக்கம், பசி, தாகம் முதலிய மாறும் நிலைகளற்றதாகவும் காண்கிறான்.

அவன் ஆத்மாவைக் குறைபாடுகளற்றதாகவும், உண்மை, அறிவு, ஆனந்தம், முடிவில்லாதது ஆகிய வடிவங்களை உடையதாகவும் பார்க்கிறான்; அவன் குழப்பமற்ற தெளிவான சிந்தனையோடு உள்ளான்; அவன் ஆத்மாவை எல்லா சட்ட திட்டங்களுக்கும் ஆதாரமாகவும், எல்லாப் பிராணிகளுக்கும் உள்ளிருந்து இயக்குவதாயும் நோக்குகிறான்.

அவன் ஆத்மாவை, ஆகாயம் போல் உள்ளும் வெளியும் ஊடுருவிப் பிளவு படாமல் இருப்பதை அறிகிறான்; அது ஆனந்த வடிவானது, மனதிற் கெட்டாதது, அனுபவத்தால் மட்டும் அறியக் கூடியது என்று உணர்கிறான்; அந்த ஆத்மா நேரில் அனுபவிக்கக் கூடியதாய் ப்ரகாசிக்கிறது. விருப்பு, வெறுப்பு முதலிய குறைகளற்றவனாயும், சாந்தம், அடக்கம் முதலிய குணங்களுடன் கூடியவனாயும் அவன் இருக்கிறான்.

அவன் காமம், குரோதம், லோபம், மோஹம், மதம், மாத்ஸரியம் என்ற ஆறு குறைகளற்றவனாக இருக்கிறான். டம்பம், அஹங்காரம் முதலிய குணங்களால் பாதிக்கப்படாதவனாய் உள்ளான்; இப்படிப்பட்ட மோக்ஷத்துக்குரிய தன்மைகள் வாய்ந்தவனே பிராம்மணன் என்று சுருதி, ஸ்மிருதி, புராணம் இதிஹாஸம் முதலிய நூல்கள் கூறுகின்றன. பிராம்மணத் தன்மை என்பது இதற்குப் புறம்பாக ஏதுமில்லை. ஆத்மாவை ஸச்சிதாநந்தமாகவும், இரண்டற்றதாகவும் உள்ள பிரம்மமாகவே உணர வேண்டும் என்று கூறி உபநிஷத் முடிக்கிறது.

ஐந்தாவது வேதம் என்று கருதப்படும் மஹாபாரதத்தில் (பாரத: பஞ்சமோ வேத:) பல இடங்களில் இதை ஒத்த கருத்துக்களைக் காணலாம்.

(i) ச்ருணு யக்ஷ குலம் தாத நஸ்வாத்யா யோ நச ச்ருதம்|
காரணம் வாத்வஜத்வேச வ்ருத்தம் ஏவ ந சம்ஸய:||
*- மஹாபாரதம்/யக்ஷப்ரச்னம்/ஆரண்ய காண்டம் 312/106*

*பொருள்:* "பிரியமான யக்ஷனே, ஜாதியைப் பற்றிக் கேட்டுக் கொள்; வேதத்தை ஓதுவதாலும், படிப்பாலும் ஒருவன் பிராம்மணன் ஆக மாட்டான்; நந்நடத்தை தான் அதை நிச்சயிக்கிறது; இதில் சந்தேகமே இல்லை.

(ii) ஸத்யம், தானம், க்ஷமா, சீலம், அத்ரு சம்ஸ்யம் தபோ க்ருணா!
த்ருச்யந்தே யத்ர நாகேந்த்ரா ப்ராம்ஹண: இதி ஸ்ம்ருதி:||
*- மஹாபாரத/ஆரண்ய வர்வம்/180/20*

*பொருள்:* ஓ பாம்புகளின் அரசனே! வாய்மை, ஈகை, பொறுமை, நந்நடத்தை, அஹிம்சை, தவம், இரக்கம் முதலிய குணங்கள் எவனிடத்தில் காணப்படுகிறதோ, அவனே பிராம்மணன் என்று ஸ்மிருதி கூறுகிறது.

(iii) யத்ரைதல் லக்ஷ்யதே ஸர்ப வ்ருத்தம் ஸ ப்ராஹ்மண ஸ்ம்ருத:|
*- மஹாபாரதம்/ஆரண்யபர்வம்/180/27*

*பொருள்:* ஓ பாம்பே! யாரிடம் நந்நடத்தை வெளிப்படையாகத் தெரிகிறதோ, அவன் மட்டுமே பிராம்மணன்.

(iv) நிராசிஷம் அநாரம்பம் நிர்நமஸ்கார மஸ்துதிம்|
அக்ஷீணாம் க்ஷீணகர்மாணம் தம் தேவா: ப்ராஹ்மனம்
விது:||

- மஹாபாரதம் / XII.269.34.

பொருள்: ஒருவன் ஆசைகளற்று, செயல்களில் ஈடுபாடற்று உள்ளான்; அவன் யாரையும் வணங்குவது மில்லை, புகழ்வதுமில்லை; அவன் செய்ய வேண்டிய கடமைகளெல்லாம் முடிந்து விட்டன, ஆனால் அவன் மட்டும் மாறவில்லை. இப்படிப்பட்டவனை தெய்வங் கள் பிராம்மணன் எனக் கருதுகின்றனர்.

பௌத்த மதமும் இதையே கூறுகிறது. அவர் களுடைய முக்கிய நூலான தம்மபதம், அத்தியாயம் 26ல் கூறியதை ஒப்பிடலாம்.

எப்பொழுதும் உண்மையையே கடைப்பிடிப்பவன் தான் பிராம்மணன் என்று ஸனத்ஸுஜாதர் கூறுகிறார். (ஸ ஏவ ஸத்யாந்நாபைதி ஸக்ஞேயோ ப்ராஹ்மண: த்வயா).

டாக்டர் S. ராதாகிருஷ்ணன் கூறுகிறார்: ''ஏற்றத் தாழ்வுகளைப் புனிதப்படுத்தி அந்த வேறுபாடுகளை மீறக் கூடாத பிரிவுகளாகக் கடினப்படுத்தும் அமைப்பைத் தள்ளுபடி செய்யும் இந்த உபநிஷத்தின் உபதேசம் மெச்சத்தக்கது.'' (முக்கிய உபநிஷத்துக்கள் பக்கம். 938)

சொல்லிணக்கண ரீதியில் நோக்கினாலும், பிராம்மணன் என்றால் பிரம்மத்தை அறிந்தவன் என்று பொருள். இங்கு பிறப்பிற்கும் ஜாதிக்கும் இடமே இல்லை.

திருமூலர் கூறுகிறார்.

சத்திய மின்றித் தனிஞானம் தானின்றி
ஒத்தவிடயம் விட்டோரும் உணர்வின்றிப்
பத்தியும் இன்றிப் பரனுண்மையின்றிப்
பித்தேறும் மூடர் பிராம்மணர் தாமன்றே.

*- திருமந்திரம் 231*

*பொருள்: மெய்ப் பொருள் அறிவு இல்லாது, தன்னை உணர்கின்ற ஞானமும் இல்லாது, மனத்தோடு பொருந்திய ஆசைகளை விடுத்து, உண்மையை உணரும் உணர்வு இல்லாது உண்மையான பத்தியும் இல்லாது, மேலான ஒரு பொருள் உண்டு என்ற நினைவும் இல்லாது, அறியாமை உடைய மூடர் அந்தணர் ஆக மாட்டார்.*

## 39. தேஜோ பிந்து உபநிஷத்

இது கிருஷ்ண யஜுர் வேதத்தைச் சேர்ந்தது. உலக விஷயங்களுக்கெட்டாததாகவும், இதயாகாசத்தில் பிரகாசிப்பதுமான ஓங்காரத்தின் பிந்துவைத் தியானிப்பதே சிறந்த வழிபாடு. (பிந்து என்ற சொல், பரம்பொருள், மிக நுண்ணியதாக ஒரு புள்ளியைப் போல, இருப்பதைக் குறிக்கும்.) உண்டி சுருங்கி, சினத்தை விட்டு, பற்றற்று, புலன்களை வென்று, இரட்டைகளைக் கடந்து, அஹங்காரம், ஆசைகள், உடமைகள் இல்லாமல் இருந்து கொண்டு, இந்தத் தியானத்தைப் பழக வேண்டும். படைப்பை ஞானமயமாக்கி உலகைப் பிரம்மமாகப்






பார்க்க வேண்டும். மனது எங்கு எங்கு செல்கிறதோ, அங்கெல்லாம் மனதால் பிரம்மத்தைக் காண்பதுதான் சிறந்த தாரணை. சச்சிதானந்தம் சித்தத்தில் நிறைந்தவனாகி, ஞானி எப்பொழுதும் சுகத்தில் நிலைத்திருக்க வேண்டும்.

முருகப் பெருமான் கேட்டபடி, சிவன்அகண்ட - ஏக ரஸ - சின்மாத்ர ஸ்வரூபத்தை உபதேசிக்கிறார். காண்பதெல்லாமே, உலகம் முழுவதுமே அகண்ட - ஏக ரஸம். எண்ணமெல்லாம் அகண்ட ரஸம். அகண்ட - ஏக ரஸமான அறிவு தான் பரம்பொருள். உருவமும் அருவமும் சின் மாத்ரம். அகண்ட - ஏக ரஸமான பிரம்மமும் சின்மாத்ரம். சாஸ்திரத்திலும், உன்னிடத்திலும், ஈசுவரனிடத்திலும் நீயே தான் அகண்ட - ஏக - ரஸமாக விளங்குகிறாய். இங்ஙனம் அறிபவன் முக்தி அடைகிறான். தெளிவான ஞானமே தான் குரு.

சிவன் முருகனுக்கு ஆத்மானுபவத்தை உபதேசிக்கிறார். நான் பரப்பிரம்ம வடிவானவன். ஆனந்த வடிவினன். ஞான வடிவினன். எல்லா உருவத்திலும் நானே இருக்கிறேன். எனக்குப் புலன்கள் இல்லை, உடலில்லை, காலமில்லை, குணங்களில்லை. 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' (நான் பிரம்மமாக இருக்கிறேன்) என்ற இந்த மந்திரம் எல்லாப் பாவங்களையும், குறைபாடுகளையும், சாவையும் போக்கும். எல்லா மந்திரங்களையும் விட்டு இந்த மந்திரத்தை மட்டும் தியானித்தால் போதும். உடனே மோக்ஷத்தை அடையலாம்.

ஜீவன் முக்தன், விதேக முக்தன் ஆகியோரின் நிலையைப் பரமசிவன் முருகனுக்கு விளக்குகிறார். தன்னைப் பரம் பொருளாகவே எண்ணி, ஆத்மாவாகவே இருப்பவன் ஜீவன் முக்தன். ஆனந்தமே தான் என்றும் ஆனந்தமே தனது வடிவம் என்றும் கருதுபவன் ஜீவன் முக்தன். தான் பிரம்மம் என நிச்சயித்துப் பரமானந்த பரிபூரணனாக உள்ளவர் ஜீவன் முக்தன். அறிவு மயமானவன் விதேகமுக்தன். ஆனந்தத்தில் மூழ்கியவன் விதேக முக்தன். வேறுபாடுகளற்றவன் விதேக முக்தன். ஞானம், அக்ஞானம் இரண்டையும் கடந்தவன் அவன். தன்னிடமே திருப்தி அடைந்தவன் அவன். ஆத்மாவிலேயே ஆனந்தமடைபவன் அவன்.

பகவான் ரிஷி நிதாகர் என்ற முனிவருக்கு ஆத்ம - அனாத்ம விவேகத்தை உபதேசிக்கிறார். சொல் விளக்க முடியாதது பிரம்மம். மனதிற்கெட்டாதது குரு, எல்லாக் காரியங்களுக்கும் காரணங்களுக்கும் மூலகாரணமான ஆத்மா காரியமும் காரணமும் இல்லாதது. அது எண்ணங்களைக் கடந்த நாத மயமான சிவம்; அறிவு மயம்; ஆனந்த மயம். குறைகளும், வேறுபாடுகளும் உள்ளது அனாத்மா. நான் உடல் என்ற எண்ணம் பந்தம், ஸம்ஸாரம், நரகம், அக்ஞானம், பெரும்பாவம். மனமே உலகனைத்தும்; மனமே எதிரி; மனமே பிறவிச் சூழல்.

மேலும் கூறுகிறார்: ஸத்தும் சித்தும் உலகை ஊடுருவியுள்ளது. ஸச்சிதானந்தம் இரண்டற்றது. அதற்குப் புறம்பாக நீயுமில்லை, நானும் இல்லை; வேறெதுவு

மில்லை. எல்லாம் ஒன்றேயாகிய பிரம்மமே. கண்டும், கேட்டும், உண்டும் அனுபவிக்கப்படுவதெல்லாம் அஸத். கர்த்தாவில் வேற்றுமை, கருமத்தில் வேற்றுமை, குணத்தில் வேற்றுமை, ரஸம் முதலியவற்றில் வேற்றுமை, காலம், இடம், பொருள் இவைகளில் வேற்றுமை எல்லாம் அஸத்தே. உண்மை இல்லை. 'நான் பிரம்மம்' என்று தியானம் செய்.

## 40. நாத பிந்து உபநிஷத்

இது ரிக்வேதத்தைச் சேர்ந்தது. இது ஓங்காரத்தின் மூன்று எழுத்துக்களான அ-உ-ம வின் வழிபாட்டைக் கூறுகிறது. ஓங்காரத்தை ஹம்ஸமாகத் தியானம் புரிய வேண்டும். முடிவில் யோகி ஓங்காரத்தைத் தாரணையால் அறிய வேண்டும். அதற்கப்பால் பரப்பிரம்மத்தின் பரஞ்ஜோதி உதயமாகிறது. ஒப்பற்ற அதை யோகத்தின் மூலமாக அடைய வேண்டும்.

கயிற்றை விட்டு மதி மயக்கத்தால் பாம்பைக் காண்பது போல, மூட புத்தியுள்ளவன் மெய்ப்பொருளை விட்டு உலகைக் காண்கிறான். கயிற்றுத் துண்டு அறியப் பட்டால், பாம்பின் வடிவம் அங்கே நிற்காது. மூடியிருப்பதை அறிந்தால், உலகம் சூனியமாகப் போகும். உடலும் உலகைச் சேர்ந்ததால் பிராரப்தத்திற்கு இருப்பிடம் இல்லாமல் போகும். பிராரப்தம் அழிந்தபின், மேகம் மறைந்த பின் சூரியப் பிரகாசம் போல, ஒளி வடிவான பிரம்மத்தில் பிரணவ நாதம் தானே தன்னிடம் விளங்கும்.

ஸித்தாஸனத்திலமர்ந்து, யோகி, வலது செவியில், உள்ளே இடைவிடாது நிகழும் ஒலியைக் கேட்க வேண்டும். இவ்வொளியைக் கேட்டுப் பழகினால், அதில் பிரம்மம் விளங்கும். இரு வாரங்களில் துரீய நிலையை எய்தலாம். எல்லா எண்ணங்களையும் செயல் களையும் விடுத்து, நாதானுசந்தானம் செய்தால், மனம் அதில் கரையும். தேனைப் பருகும் வண்டு வாசனையை வேண்டுவதில்லை. நாதத்தில் லயித்த மனம் விஷய சுகத்தை நாடுவதில்லை. சப்தம் ஒடுங்கிய நிலையில், யோகி பிரம்மத்தை அனுபவிக்கிறான். பிரம்மப் பிரணவ நாதத்தில் எல்லாம் லயமடைகிறது. பார்க்க வேண்டிய பொருள் இல்லாமையால் பார்வை நிலைத்ததாகவும், பிராணாயாம முயற்சியில்லாமல் மூச்சுக் காற்று நிலைத்த தாகவும், பிடிப் பேதுமில்லாமல் மனம் நிலைத்ததாகவும் ஆகிறது. அதுதான் தாரகப் பிரம்மத்தின் நாத ரூபம்.

## 41. த்யான பிந்து உபநிஷத்

இது கிருஷ்ண யஜுர் வேதத்தைச் சேர்ந்தது. ஓங்காரத்தின் ஒலியையும் அதற்கு அப்பாலுள்ள அழியாப் பொருளில் லயித்து சப்தம் ஒடுங்கின நிலையையும் அறிந்தால் அதுவே பரம பதம். பிரணவம் வில்; ஆத்மா அம்பு; பிரம்மம் குறி என்று சொல்லப்படுகிறது. கவனக் குறைவின்றி குறி நோக்கிப் பாய்ந்து செல்ல வேண்டும்.

எண்ணெயின் பெருக்குப் போல பிளவு படாததாக வும், நீண்ட மணியோசை போல் தொடர்ந்ததாகவும்

விவரிக்க முடியாததாகவும் உள்ள பிரணவத்தின் உச்சியை அறிந்தவன் வேதத்தின் உட்பொருளை அறிந்தவனாவான்.

மஹாவிஷ்ணுவைத் தொப்புளிலும், பிரம்மாவை இதயத்திலும், ஞான ஸ்வரூபியான சிவனை நெற்றியிலும் தியானிக்க வேண்டும். தலை உச்சியில் பல இதழ்களுடன் கூடிய தாமரையின் நடுவில், அக்கினியையும், சூரியனையும், சந்திரனையும் ஒன்றன் மேல் ஒன்றாகத் தியானிக்க வேண்டும்.

தொப்புள், இதயம், தலை என்று இடங்கள் மூன்று; இடை, பிங்களை, ஸுஷும்னா என்று மார்க்கங்கள் மூன்று; பிரம்மா, விஷ்ணு, சிவன் என்று தேவதைகள் மூன்று; அ, உ, ம என்று எழுத்துக்கள் மூன்று; ஒன்று, இரண்டு, மூன்று என்று மாத்திரைகள் மூன்று. அவற்றுடன் அர்த மாத்திரையையும் அறிந்தவன் வேதத்தை அறிந்தவன் ஆவான்.

ஹகாரத்துடன் மூச்சை வெளியே விட்டு, ஸகாரத்துடன் மூச்சை உள்ளே இழுத்து, ஹம்ஸ: என்ற மந்திரத்தை, இரவும் பகலும், 21,600 தடவை ஜீவன் ஜபிக்க வேண்டும். அஜபா காயத்ரி எனும் இது யோகிகளுக்கு மோக்ஷத்தை அளிப்பதாகும். இதை எண்ணிய அளவிலேயே மனிதன் பாவத்தினின்று விடுபடுகிறான். இதற்கு ஒப்பான வழிபாடோ, ஜபமோ, புண்ணியமோ வேறில்லை.

தவத்தின் வெப்பத்தாலும், பிராணா யாம வாயுவாலும், மனதின் ஒருமைப்பாட்டாலும் எழுப்பப்பட்ட குண்டலினி

சக்தி, நூலை எடுத்துக் கொண்டு ஊசி செல்வது போல, ஸுஷும்னா நாடி வழியாக மேலே செல்லுகிறது. யோகி, அந்தக் குண்டலினி சக்தியால், ஸஹஸ்ராரமாகிய மோக்ஷ வாயிலை அடைந்து, சாவியால் கதவைத் திறப்பது போல, திறக்கிறான். மூலாதாரத்திலிருந்து கிளம்பும் -ஸுஷும்னா நாடி தாமரை நூலைப் போன்றது. வீணையின் நாதம் போலும், சங்கத்தில் ஒலி போலும், குழலோசை போலும் மயில் கூவுவது போலும், நாதம் தோன்றும். கபாலத்தின் நாலு வாயில்களின் நடுவில் ஆகாயத்தில் சூரியன் பிரகாசிப்பது போல, ஆத்மா ஒளி வீசும். இதைக் காணும் யோகியின் மனம் லயமடைகிறது. ரத்தினத்தின் ஒளி சந்திரனின் பிரகாசத்தில் மறைவது போல, நாதம் அங்கே ஓங்காரத்தில் ஒடுங்குகிறது. அது மஹேச்வரன் இருக்கும் இடம். இதை அறிந்தவன் கைவல்யம் எனும் இன்பத்தை அனுபவிக்கிறான்.

## 42. ப்ரஹ்ம வித்யோபநிஷத்

இந்த உபநிஷத் ஓங்காரத்தின் உடலையும் இடத்தையும் கூறுகிறது. மூன்று காலங்களும், மூன்று தேவர்களும், மூன்று வேதங்களும், மூன்று அக்னிகளும், மூன்று மாத்திரைகளுடன் கூடிய அரை மாத்திரையும் மூன்று எழுத்துகளாலான, மங்கள வடிவான ஓங்காரத்தில் அடக்கம்.

முதல் எழுத்தாகிய அகாரத்தின் உடலாக ரிக் வேதம், கார்ஹபத்யாக்னி; பூமி, பிரம்மா ஆகியவை கூறப்படு கின்றன. இரண்டாவது எழுத்தாகிய உகாரத்தின் உடலாக யஜுர் வேதம், தக்ஷிணாக்னி, ஆகாயத்திற்கும் பூமிக்கும் நடுவிலுள்ள மண்டலம், விஷ்ணு ஆகும். மகாரத்தின் உடல் ஸாம வேதம், தக்ஷிணாக்னி, விண், பரமசிவன் ஆகும்.

புருவமத்தி சூரியப் பிரகாசமுள்ள அகாரத்தின் இடம் சந்திரனைப் போல் பிரகாசிக்கும் உகாரம் அதன் நடுப் பாகம். புகையில்லாத மின்னல் போல் பிரகாசிக்கும் மகாரமும் நடுவில் உள்ளது. இவ்வாறு மூன்று மாத்திரை களும் சூர்ய சந்திர, அக்கினி வடிவாக அறிந்து கொள்ள வேண்டும். அந்தப் புருவ மத்திக்கு மேல் தீபத்தின் சிகை போல் உள்ளது ஓங்காரத்தின் மேல் விளங்கும் அர்த்த மாத்திரை.

குருவே பிரத்தியக்ஷமான ஹரி என்று வேதம் கூறுகிறது. ஹம்ஸ: என்று ஜபிப்பவன் பிரம்மமாகவும், ஹரியாகவும், சிவனாகவும் ஆகிறான். எள்ளில் எண்ணெய் போலும், பூவில் நறுமணம் போலும், மனித உடலில் பரம்பொருள் உள்ளும் வெளியும் உள்ளது.

உலகில் கையில் தீவட்டியுடன் ஒரு பொருளைத் தேடுபவன், அதைக் கண்டவுடன், தீவட்டியை கை விடுவது போல, ஞானத்தைக் கொண்டு பரம்பொருளைக் கண்ட பின், ஞான ஸாதனத்தை விட்டு விடலாம்.

# 43. யோக தத்வோபநிஷத்

இது கிருஷ்ண யஜுர் வேதத்தைச் சேர்ந்தது. பிரம்மாவிற்கு மஹாவிஷ்ணு உபதேசித்த யோக தத்துவத்தை இந்நூல் கூறுவதால் இதற்கு இப்பெயர் வந்தது.

எல்லா ஜீவர்களும் இன்ப துன்ப வடிவான மாய வலையில் சிக்கி இருக்கிறார்கள். அவர்களுக்கு முக்தி அளிக்க மாயை எனும் வலையை வெட்ட வேண்டும். அக்ஞானத்தால் ஸம்ஸாரம்; ஞானத்தால் மோக்ஷம். மந்திர யோகம், லய யோகம், ராஜ யோகம், ஹட யோகம் என்று பல பிரிவுகள் யோகத்தில் உள்ளன.

மாத்ருகா அக்ஷரங்களுடன் கூடிய மந்திர ஜபத்தைச் செய்யும் யோகி அதைப் பன்னிரண்டு வருஷம் தொடர்ந்து செய்தால், அணிமா முதலிய எட்டு சித்திகளையும் அடைவான். ஆசையால் உந்தப்பட்டு யோகிகளில் கடைப்பட்டவன் இதை நாடுவான்.

பயயோகம் என்பது சித்தத்தை ஈசுவரனிடத்தில் ஒருங்கிணைப்பதாகும். குற்றம், குறைகளற்ற ஈசுவரனை நடந்தாலும், நின்றாலும், உறங்கினாலும், உண்டாலும் எப்பொழுதும் தியானிக்க வேண்டும்.

இனி ஹட யோகத்தைக் கவனிப்போம். யமம் முதலிய எட்டு பிரிவுகள் கொண்டது அஷ்டாங்க யோகம் எனப்படும். உண்டி சுருங்குதலே யமம். அஹிம்சையே நியமம். ஆஸனங்களில் சித்தம், பத்மம், ஸிம்ஹம்,

பத்ரம் ஆகிய நான்கும் முக்கியம். பிறகு மாத்திரைகளை நீட்டி ஓங்கார ஜபம் செய்ய வேண்டும். அதன் மேல், முழுதும் ஒன்றுபட்ட மனதுடன் பிராணாயாமப் பயிற்சியைத் தொடர்வதால் 'ஹடாவஸ்தை' என்பதை யோகி அடைவான். பிராணனும் அபாணனும், மனமும் புத்தியும் ஜீவாத்மாவும் பரமாத்மாவும், ஒன்றுக்கொன்று வேறுபடாமல் ஐக்கிய பாவத்தை அடையும் நிலை ஹடாவஸ்தை எனப்படும் வெகுதூரத்தில் உள்ளதைப் பார்ப்பதும், கேட்பதும், நொடியில் நெடுந்தூரம் செல்வதும், வாக்கு ஸித்தியும், நினைத்த உருவமெடுப்பதும், காணாமல் மறைவதும் ஆகிய ஸித்திகள் ஏற்படும். ஆனால் புத்திசாலி அதில் மகிழ மாட்டான். அவை மஹாஸித்திக்கு இடையூறுகள்.

அதன்மேல் யோகி, குறிப்பிட்ட படி, ஐந்து இயற்கைச் சக்திகளின் தாரணைகளை அப்பியாஸம் செய்ய வேண்டும். அதனால் திடமான உடலை அடைவான். மண், நீர், நெருப்பு, காற்று இவைகளால் அவனுக்குச் சாவு ஏற்படாது. ஆகாயத்தில் சஞ்சரிக்கக் கூடிய ஸித்தி ஏற்படும். பிரம்மாவின் பிரளயத்திலும் அவன் அழியமாட்டான்.

சமாதி என்பது ஜீவாத்மா பரமாத்மாவில் ஒன்றுபட்ட நிலை. அந்த யோகி, உடலை விட்டுவிட விரும்பினால் தானாகவே விட்டுவிடலாம். பரப்பிரம்மத்தில் லயத்தை அடைவான். அவனுடைய பிராணன் கிளம்பி வேறு உலகங்களுக்குச் செல்வதில்லை.

சமாதி நிலையைப் பற்றித் திருமூலர் பாடுகிறார்.

விந்துவும் நாதமும் மேருவில் ஓங்கிடில்
சந்தியில் ஆன சமாதியில் கூடிடும்
அந்தம் இலாத அறிவின் அரும்பொருள்
சுந்தரச் சோதியும் தோன்றிடும் தானே

*(திருமந்திரம் 619)*

பொருள்: விந்துவும் நாதமும் தலையில் உள்ள ஆயிர இதழ்த் தாமரையில் மிகுந்து விளங்கினால் யோகமான சமாதியில் ஜீவன் பொருந்தி இருக்கும். அப்பொழுது இறுதியில், ஞான வடிவான சிவம் அழகான பேரொளி யாய்ப் புலப்படும்.

## 44. ஆத்மப்ரபோத உபநிஷத்

இது ரிக் வேதத்தைச் சேர்ந்தது. உள்ளத்தில் ஆனந்த ஸ்வரூபியாக விளங்கும் பிரம்மத்தின் வடிவம் பிரணவம். அந்த ஓமை யோகி ஜபித்து முக்தி அடைகிறான். 'ஓம் நமோ நாராயணாய' எனும் மந்திரத்தை வழிபடுபவன் வைகுண்டத்தை அடைகிறான். மின்னல் கொடி போலும், ஒளிரும் தீபம் போலும் பிரகாசிக்கும் இதயமே அது. எல்லா உயிர்களிலும் உறையும் நாராயணனே காரண புருஷன். அவன் காரணமில்லாதவன். அவனே பரம புருஷன். அவனை ஓம் என்று தியானிப்பவன் துன்பங்களி லிருந்து விடுபடுவான்.

இரட்டைகளிலிருந்து பயம் விளைகிறது. பிரக்ஞானமே பிரம்மம். யோக சித்தியை அடைந்தவன், தான் மாயை நீங்கியவன் என்றும், உலகிற்கும் ஈசுவரனுக்கும் வேறுபாட்டைக் காணாதவன் என்றும் கூறுகிறான். எப்படிக் கரும்புச் சாறில் இனிப்பு பரவியுள்ளதோ, அப்படிப் பிரம்ம ரூபத்தால் ஊடுருவப் பெற்று, தான் மூவுலகிலும் பரவியிருப்பதாக அவன் கூறுகிறான்.

தொடர்கிறான் யோகி:

பிரம்மா முதல் புழு வரை பிராணிகளெல்லாம் என்னிடம் கற்பனை, கடலில், நீர்க்குமிழி முதல் அலை வரை எல்லாம் எங்ஙனம் உள்ளனவோ, அங்ஙனம் அவையெல்லாம் என்னிடம் உள்ளன. அலையிலுள்ள நீரை எப்படிக் கடல் வேண்டுவதில்லையோ, அப்படி ஆனந்த ரூபியான எனக்குப் புலன்கள் தொடர்பான விஷயங்களில் ஈடுபாடு இல்லை.

செல்வம் நிறைந்தவன் எப்படி ஏழ்மையை விரும்புவதில்லையோ, அப்படி பிரம்மானந்தத்தில் மூழ்கியுள்ள எனக்குப் புலன்கள் விஷயத்தில் பற்றில்லை.

குடத்தைப் பிரகாசப்படுத்தும் சூரியன், குடம் உடைந்தால், அழிவதில்லை. அதே மாதிரி, உடல் அழிந்தால், உடலைப் பிரகாசிப்பிக்கும் ஸாக்ஷியான ஆத்மா அழிவதில்லை.

பிராணன்கள், அவைகளின் இயல்புக்கேற்றவாறு, செயல்படட்டும்; மனம் ஆசைகளால் அடிபடட்டும். முழுமையான ஆனந்த புத்தியுடைய எனக்குத் துக்கம் எங்ஙனம் உண்டாகும்?

ஆத்மாவை நான் தெளிவாக அறிகிறேன். அறிவின்மை மறைந்து விட்டது. நான் செய்பவன் என்ற எண்ணமும், செய்ய வேண்டியதும் எனக்கு ஏதுமில்லை.

எக்காலத்தும் பழுதையில் பாம்பு இல்லாதவாறு, அஹங்காரம் முதல் உடல் வரை உள்ள உலகம் என்னிடம் இல்லவே இல்லை. நான் இரண்டற்றவன்.

நான் அறிவு வடிவானதால், மடத்தன்மை எனக் கில்லை; நான் ஸத்திய வடிவானதால், பொய் என்னிட மில்லை. ஆனந்த ரூபியாதலால், எனக்கு துக்கமில்லை; ஆனால் அறிவின்மையால் அது இருப்பது போல் தோன்றுகிறது.

மாணிக்கவாசகர் பாடுகிறார்:

ஊற்று இருந்து உள்ளம் களிப்போன் போற்றி

- திருவாசகம்/திருவண்டப் பகுதி 3/121

பொருள்: அன்பு சொரூபமாகிய சிவன் உள்ளத்தினுள் அன்பாக ஊற்றெடுத்து ஆனந்தத்தைப் பெருக்குகிறான்.

அவருக்கு வணக்கம்.



## இந்த நூலில்



